# தத்துவமாவது நீறு

**சித்தாந்தி** - ஐயா, மாயாவாதியாரே, இவ்வுலகத்தில் நாம் பார்க்கும் வஸ்துக்களில் மாறாத நித்தியமான நிற்குண வஸ்து எது?

**மாயாவாதி** - நாம் பார்க்கும் வஸ்துக்களெல்லாம் மித்தை, அழியக்கூடியதாயிற்றே, மாறாதநித்திய நிற்குணவஸ்து பார்க்க முடியுமா, ஐயா?

**சித்தாந்தி** - மாயாவாதியாரே, நீர் நெற்றியிலணிந்திருக்கும் திரு நீறு அழியுமா? மாறுமா? கவனித்துப் பதில் சொல்லும் பார்ப்போம்.

**மாயாவாதி** - ஐயா, சாம்பலானது அழியுமா? மாறுமா? எத்தனை தரம் குகையில் புடம்வைத்தாலும் நிறைகுறையாது, நிறம்மாறாது, அழியாது, அப்படியே யிருக்குமே? அதை நித்தியமென்று சொல்லாம். இந்த வஸ்து வைப்பற்றி விவரமாய்ச் சொல்லவேண்டும், ஐயா.

**சித்தாந்தி** - இவ்வுலகத்தில் சாம்பலாகாத வஸ்து ஒன்றுமில்லை. நவரத்தினங்களும் பஸ்மமாக்கப் படுகின்றன. பார்க்கப்படும் பொருள்களில் வயிரக்கல் அதிக கெட்டியானது. அதைப் பஸ்மாக்கி விடுகிறார்கள். எல்லாம் 'அந்தமதாவது நீறு' என்று ஒருகாலத்தில் சாம்பலாகத்தான் முடியவேண்டும்.

**மாயாவாதி** - ஐயா, 'சுண்ணத்திலிருக்கிறது சூட்சுமம்' என்ற வாக்கியத்தின் கருத்து இப்போது தான் விளங்கிற். 'சுண்ணம்' என்பது நீறுதானே?

**சித்தாந்தி** - ஆம்! நமது திருநாவுக்கரசு கூறுகிறார்:

> "சோதியாய்ச் சுடருமானார் **சுண்ண வெண்சாந்து பூசி**
> ஓதிவா யுலகமேத்தவு - கந்து தாம் அருள்கள் செய்வார்
> ஆதியாயந்தமானார் யாவரு மிறைஞ்சி யேத்த
> நீதியாய் நியமமாகி நின்ற நெய்த்தானனாரே"

**மாயாவாதி** - அழிவுகாலம் என்னும் முடிவு காலத்தில் பார்க்கும் பொருள்களெல்லாம் அருவநிலை யடைந்து விட்டால் அப்போது இந்தச் 'சுண்ண வெண்சாந்து' என்று கூறிய சாம்பல் என்ன ஆகும்?

**சித்தாந்தி** - மேற்கூறிய தேவாரத்திலேயே அந்த இரகசியம் காட்டப்பட்டிருக்கிறதே, கவனித்துப்பாரும்.

**மாயாவாதி** - ஐயா, விவரமாய்ச் சொல்லவேண்டும்.

**சித்தாந்தி** - 'எரியுருவனாகிய' எம்பிரான் மஹா சங்காரகாலத்தில் தன்னாணைக்குட்பட்ட எரிவருக்கங்களாகிய மூவகை யக்கினியையும் தன்னிலடக்கி தன் நெற்றிக்கண்ணக்கினியால் எல்லா நாமரூப வஸ்துக்களைச் சாம்பலாக்கி மிஞ்சி நிற்கும் 'சுடுபொடி' யில் ஆடிநிற்பார். அப்போது தான் அவரைச்

(1) 'சோதியாய்ச் சுடருமானார் சுண்ணவெண் சாந்துபூசி" என்றருளியது.

எரிவருக்கங்களை யடக்கியாளும் நம்முக்கட் கடவுள் தான் கெற்பத்தில் உஷ்ணத்தைப் புகட்டி சீவகோடிகளை யுண்டாக்கி வளர்க்கும் வல்லமையை யுடையவராவார். ஆகவே அவர்தான்

(2) "ஒதிவா யுல்கமேத்த வுகந்து தர்மருள்கள் செய்வார்" அதாவது அருள்களாகிய பஞ்சக்கிருத்தியங்களைச் செய்வார். சான்றேருலகம் அக்காருண்ய மூர்த்தியை 'வியந்தேத்து' வார்கள்.

(3) "ஆதியாயந்தமானார் யாவருமிறைஞ்சி யேத்த"

இவ்வளவு 'வலிய' முக்கட்கடவுள் தன்னிட்டப்பட்டி யெதுவுஞ் செய்யக்கூடும். ஆனால் அநீதியான காரியங்களைச் செய்வாரோவென்றால், அல்ல.

(4). "நீதியாய் நியமமாகி நின்ற நெய்த்தானனாரே"

**மாயாவாதி** - ஐயா, மாயாவாதத்தில் பரிபாஷை யவஸ்தையிலும் மயக்கத்திலும் நான் உழன்றது போதும். இனியனுபவ உண்மைகளடங்கிய தேவார திருவாசக இரகசியங்களை யவ்வான்றோருதவியாலுணர்ந்து அந்நால்வர் சென்ற முத்திநெறி பாகிய 'மூர்த்திதவந் தீர்த்த முறையாற்றொடங்கி' வழிபட்டுய்வேன்.

**சித்தாந்தி** - இத்திருநீற்றச் சமயத்தின் முக்கிய குறியாகிய மேற்கூறிய 'திருநீற்றைப் பற்றிப் புறச்சமயம் எதாவது கூறுகின்றதாவென்று பார்ப்போம். நமது புண்ணிய சக்கரவர்த்தியின் சமயமாகிய கிறிஸ்து சமய வேதமாகிய விவிலிய நூலில்.

Psalm 102 - ல். 'Hear my prayer, O Lord, and let my cry come into Thee'..........

"For I have eaten *ashes* like bread and mingled my drink with weeping'. என்று கூறப்பட்டுள்ளது. அதின் கருத்தாவது "ஓ கடவுளே, எந்தன் றோத்திரத்தைக்கேள், என் கூக்குரல் உன்னிடத்தில் அடையும் படிக்கு அனுக்கிரகம் புரிந்துருள்வாய்"

"ஏனென்றால் நான் சாம்பலையே ஆகாரமாக உட்கொண்டு வருகிறேன், நான் பானம் செய்து வருவது கண்ணீர்கம்பலைதான்," என்னும் விவிலியக் கருத்தை நோக்க, நமது ஸ்ரீஞானசம் பந்தப்பெருமான் வெளியிட்ட திருநீற்றுப் பதிகத்தில் "ஆசை கெடுப்பது நீறு, (சிவஞான) போதம் தருவது நீறு" என்ற சைவ சித்தாந்தக் கருத்தையே மஹா தபோஞானிகள் மேனாடு சென்று விளக்கினார் என்பதற்கு ஐயமில்லை. நமது மணிவாசகப் பெருமான் மலர்ந்தருளிய 'திருவாசகம்,' மொழி

பெயர்த்த ஜி. யூ. போப்பையர் அவர்கள் அந்நூலின் முகவுரையில் கூறும் சம்பந்தமுஞ் சான்றாக ஒற்றுமைப்படுத்திக் கொள்ளலாங் கண்டீர்.

ஹர. ஷண்முக முதலியார்.

சித்தாந்தம் - 1912 ௵ - ஏப்ரல் ௴